# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Monday, the 7th May 1962.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. SRI S. CHELLAPANDIAN) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS

## STARRED QUESTIONS

*Labour Relations Officer (Electricity Board)*

*38 *Q.*—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have any proposal for the appointment of a Labour Relations Officer, under the Electricity Board; and

(*b*) if so, when?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) & (*b*) Yes, Sir. The matter is under consideration.

SRI M. KALYANASUNDARAM: ஸார், இந்த யோசனை மூன்று வருஷ காலமாக அரசாங்கத்தின் முன்பு இருந்திருக்கிறது. இதற்கு முன்பு ஒரு முறை அதிகாரியை நியமித்து உததிரவு போட்டது உண்மையா? அப்படிப் போடப்பட்ட உத்திரவு அவர் சீப் என்ஜினியரின்கீழ் வேலை செய்வதா அல்லது எலக்ட்ரிசிடி போர்டின்கீழ் வேலை செய்வதா என்ற தகராரின் காரணமாக ரத்து செய்யப்பட்டதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ஆபீசர் எவரை நியமிப்பது என்பதுபற்றி யோசிக்கப்பட்டது. ஆனால் முடிவு ஏற்படவில்லை. இப்போது முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இப்போது அதற்கு ஒரு ஆபீசர் போஸ்ட் செய்யப்படும்.

SRI M. KALYANASUNDARAM: இப்போது என்ன முடிவு ஏற்பட்டு இருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: லேபர் ரிலேஷன்ஸ் ஆபீசர் என்பவர் எலக்ட்ரிசிடி போர்டின்கீழ் வேலை செய்வது என்று முடிவு ஏற்பட்டிருக்கிறது.

SRI A. THANGAVELU: வேலூர் மின்சார போர்டிலிருந்து என். எம்.ஆர். என்னும் பகுதியின்கீழ் வேலை செய்யக்கூடிய 500-க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் காரணமின்றி வேலையிலிருந்து நீக்கப்பட்டது சர்க்காருக் குத் தெரியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அது வேறு விஷயம். அதற்குத்தனி கேள்வி வேண்டும்.

SRI M. KALYANASUNDARAM: ஸார், இந்த அதிகாரி எந்த இலாகாவிலிருந்து தேர்ந்தெடுத்து அனுப்பப்படுவார்கள்? அவர் எலக்ட்ரிசிடி போர்டுக்கு உட்பட்டு நடப்பாரா? அல்லது சீப் என்ஜினியருக்கு உட்பட்டு நடப்பாரா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்த அதிகாரி லேபர் இலாகாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகின்றார். இப்படி எலக்ட்ரிசிடி போர்டு, சீப் என்ஜினியர் என்று பிரித்துப் பேசுவதில் அர்த்தமில்லை. அவர் எலக்ட்ரிசிடி போர்டில் வேலை செய்வார்.

SRI MUNU ADHI : தலைவர் அவர்களே, லேபர் ரிலேஷன்ஸ் ஆபீசர் மாவட்ட ரீதியாக நியமிக்கப்படுவாரா ? அல்லது மாநில ரீதியில் நியமிக்க படுவாரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மாநில ரீதியாக நியமனம் செய்ய ஒரே ஒரு லேபர் ரிலேஷன்ஸ் ஆபீசர் தான் நியமிக்கப்படுகின்றார். மாநிலம் பூராவும் அவர் வேலை செய்வார்.

SRI M. KALYANASUNDARAM : இந்த தொழிலாளர் நல இலாகா அதிகாரியினுடைய பணிகள் என்னென்ன, கடமைகள் என்னென்ன, அதிகாரங்கள் என்னென்ன, என்று வரையறுக்கப்பட்டு உள்ளதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மற்ற ஸ்தாபனங்களிலே லேபர் ரிலேஷன்ஸ் ஆபீசர் எந்தமாதிரி வேலை செய்வாரோ, அதே மாதிரி தான் இவரும் வேலை செய்வார்.

*Loans to Agriculturists*

* 39 *Q.*—SRI K. A. MATHIALAGAN (on behalf of Sri S. Madhavan) : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the various loans granted to agriculturists by the Government through the Panchayat Union Councils;

(*b*) the principles adopted in granting those loans; and

(*c*) the amounts granted under each head of the loans in the years 1959–60 and 1960–61?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No loans to agriculturists are granted through the Panchayat Union Councils

(*b*) & (*c*) Do not arise.

SRI V. S. S. MANI : தலைவர் அவர்களே, விவசாயிகள் கடன் தொகை வாங்குவதிலே காலதாமதம் ஏற்படுகின்றது. இருபத்தைந்து சதம் வரை உழவர்களுக்கு இதற்காக அலுவலகத்தில் செலவு ஏற்படுகின்றது என்பது அரசினருக்குத் தெரிய வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கடன் தொகை கொடுப்பதிலே பரிசீலனை செய்யப்பட்டு எவ்வளவுதூரம் கடன் கொடுக்கலாம், எவ்வளவு தூரம் அவர் கடன் வாங்குவதற்கு சக்தி இருக்கிறது என்பதை பரிசீலனை செய்து, கடன் கொடுக்கப்படுகிறது. அந்த அளவிலேதான் தாமதம் ஏற்படுகிறது. வேறு வகையிலே தாமதம் ஏற்படுவதாகத் தெரியவில்லை. ஆகவே, எந்த வகையிலே தாமதம் ஏற்படுகிறது என்பதை குறிப்பிட்டு கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னால், மேற்கொண்டு அதில் கவனம் செலுத்தி, வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும். இந்த கடன் தொகை பெறுவதிலே எவ்வளவு செலவாகும் என்கிற தகவல் என்னிடம் இல்லை.

SRI A. DURAIYARASAN : ஸார், கொடுக்கப்பட்டிருக்கிற கடன்கள் பாதிக்கப்பட்ட பிரதேசங்களிலே இருந்து மேற்கொண்டும் இந்த கடன்களை ஒத்தி வைக்க வேண்டுமென்று அரசாங்கத்திற்கு மனு செய்திருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது வேறு விஷயம். அதுபற்றி தனியாக கேள்வி கேட்கவேண்டும். அதுவும் குறிப்பாக கேட்க வேண்டும். இந்த இடத்திலிருந்து தள்ளி வைக்க வேண்டுமென்று மனு செய்யப்பட்டு இருக்கிறதா என்று இடத்தை குறிப்பிட்டு கேட்டால், அதற்கு விடை அளிக்கலாம்.